நரியைக்குதிரைப்பரியாக்கிஞாலமெல்லாநிகழ்வித்துப்
பெரியதென்னன்மதுரையெல்லாம்பிச்சதேற்றும்பெருந்துறையா
யரியபொருளேயவநாசியப்பாபாண்டிவெள்ளமே
தெரியவரியபரஞ்சோதிசெய்வதொன்றுமறியேனே. (எ)

திருச்சிற்றம்பலம்.

---

# அச்சோப்பதிகம்.

அநுபவவழியறியாமை.

தில்லையிலருளிச்செயப்பட்டது.

---

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

முத்திநெறியறியாதமூர்க்கரொடுமுயல்வேனைப்
பத்திநெறியறிவித்துப்பழவினைகள்பாறும்வண்ணஞ்
சித்தமலமறுவித்துச்சிவமாக்கியெனையாண்ட
வத்தனெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே. (க)

நெறியல்லாநெறிதன்னைநெறியாகநினைவேனைச்
சிறுநெறிகள்சேராமேதிருவருளேசேரும்வண்ணங்
குறியொன்றுமில்லாதகூத்தன்றன்கூத்தையெனக்
கறியும்வண்ணமருளியவாறார்பெறுவாரச்சோவே. (உ)

பொய்யெல்லாமெய்யென்றுபுணர்முலையார்போகத்தே
மையலுறக்கடவேனைமாளாமேகாத்தருளித்
தையலிடங்கொண்டபிரான்றன்கழலேசேரும்வண்ண
மையனெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே. (௩)

மண்ணதனிற்பிறந்தெய்த்துமாண்டுவிழக்கடவேனை
யெண்ணமிலாவன்பருளியெனையாண்டிட்டென்னையுந்தன்
சண்ணவெண்ணீறணிவித்துத்தூய்நெறியேசேரும்வண்ண
மண்ணலெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே. (௪)

பஞ்சாயவடிமடவார்கடைக்கண்ணாலிடர்ப்பட்டு
நெஞ்சாயதுயர்கூரநிற்பேனுன்னருள்பெற்றே
னுய்ஞ்சேனுனுடையானேயடியேனைவருகவென்
றஞ்சேலென்றருளியவாறார்பெறுவாரச்சோவே. (௫)

வெந்துவிழுமுடற்பிறவிமெய்யென்றுவினைபெருக்கிக்
கொந்துகுழற்கோல்வளையார்குவிமுலைமேல்வீழ்வேனைப்
பந்தமறுத்தெனையாண்டுபரிசறவென்றுரிசுமறுத்
தந்தமெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே. (சு)

தையலார்மையலிலேதாழ்ந்துவிழக்கடவேனைப்
பையவேகொடுபோந்துபாசமெனுந்தாழுருவி
யுய்யுநெறிகாட்டுவித்திட்டோங்காரத்துட்பொருளை
யையனெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே. (எ)

சாதல்பிறப்பென்னுந்தடஞ்சுழியிற்றடுமாறிக்
காதலின்மிக்கணியிழையார்கலவியிலேவிழுவேனை
மாதொருகூறுடையபிரான்றன்கழலேசேரும்வண்ண
மாதியெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே. (அ)

செம்மைநலமறியாதசிதடரொடுந்திரிவேனை
மும்மைமலமறுவித்துமுதலாயமுதல்வன்று
னம்மையுமோர்பொருளாக்கிநாய்சிவிகையேற்றுவித்த
வம்மையெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே. (கூ)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவாசகம் முற்றுப்பெற்றது.

## திருவாசகப்

# பாட்டுமுதற்குறிப்பகராதி.

முற்றிற்று.